# திருமுறைகளில் இசை நாடகத் தமிழ்ச் சொற்கள்

பண்ணாராய்ச்சி வித்தகர் **குடந்தை, ப. சுந்தரேசன்**.

## முதற்றிருமுறை - முதற்பதியம்

### திருப்பிரமபுரம் (சீகாழி)

நட்டபாடைப் (நைவளம்) பண்ணில் அமைந்துள்ள ஆளுடையபிள்ளையாரின் அருட்பதியங்களில் 'தோடுடைய செவியன்' எனும் முதற்பதியத்தில் அமைந்த சொற்களை (இசை நாடகம்) ஈண்டு முதற்கண் குறித்தே முறையே ஒவ்வொரு பதியத்தையும் எடுத்துக் கொள்வோம்.

முதற்பதியத்தலைப்பு = 1 தோடுடைய செவியன். இப்பதியத்தில் ஆறாவது பாடலில், "மறை கலந்த ஒலி பாடலோடு ஆடலராகி" என வருவது கொண்டு, இசைத் தமிழ்ச் சொற்கள்,

1 - ஒலி
2 -. பாடல்

நாடகத் தமிழ்ச் சொற்கள்.

1 - ஆடல், என நம் முத்தமிழ் விரகரின் அருட்சொற்கள் சிவநெறிக் கலைப்பகுதியை விளக்கு முகத்தான் தொடங்குவது அறியலாம்.

ஏழாவது பாடலில், 'வீசிச் சதிர் வெய்த' எனுமிடத்து அமைந்த சதிர் எனும் சொல், பிற்கால நாட்டியத் தமிழ்ச் சொல்லாயிற்றென்பதை நன்குணரலாம். தஞ்சாவூர்ச் சதிர் ஒரு தனிக் கலையாக விளங்கியதுண்டு.

ஒன்பதாவது பாடலில் 'வாள் நுதல் செய்மகளீர் எனும் சொற்கள் அக்காலத்திய ஆடற்றமிழ் பயின்று காழியெம்பெருமானுக்குத் தொண்டு (கோயிற்றொண்டு) புரிந்தோரைக் (ஆடன் மகளிர்) குறிப்பிடுவதறியலாம். -
நிறைவு = ஞானசம்பந்தன் உரைசெய்த திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே.

## இரண்டாந் திருப்பதியம்

### திருப்புகலூர்: -

முதற்பாடலில் குறிகலந்த இசை' எனும் சொற்கள். நரம்பின் ஒலிகளுக்கு ஏற்படுத்திய குறியீட்டெழுத்துக் களை உணர்த்துவனவாகும்.

இ. த. சொ. = 3.குறி
இ. த. சொ. = 4.இசை

மூன்றாவது பாடலில், 5. **பண்**. இது பண்ணிலாவும் மறை, எனக் கூறப்பெறுவதாலறியலாம்.

ஆறாவது பாடலில், 'கழலின் ஓசை', " சிலம்பின் ஒலி யோசை', ' குழலின் ஓசை', 'விழவின் ஓசை', ' முழவின் ஓசை' எனுமிடத்து,

இ. த. சொ. = 6. ஓசை
இ. த. சொ. = 7. குழல்
இ. த. சொ. = 8. முழவு

நிறைவு = ஞானசம்பந்தன் தமிழ்மாலை பற்றி என்றும் இசை பாடிய மாந்தர் பரமன் அடிசேர்ந்து குற்றமின்றிக் குறைபாடு ஒழியாப் புகழோங்கிப் பொலிவாரே.

## மூன்றாம் பதியம்

### திருவலிதாயம்: -

இப்பதியம் நான்காவது பாடலில் 'பாடும் அடி யார்க்கே' என்ற சொல்லும் எட்டாவது பாடலில் நடமாடி என்ற சொல்லும் தவிர, தனித்த முறை இசை நாடகத் தமிழ்ச் சொற்கள் இல்லை.

நிறைவு = ஞானசம்பந்தன் தமிழ் பத்தும் கொண்டு வைகி இசை பாட வல்லார் குளிர் வானத்துயர்வாரே.

## நான்காம் பதியம்

### திருப்புகலியும் திருவீழிமிழலையும்: -

மூன்றாம் பாடலில், 'கன்னியராடல்' எனும் சொற்களும், இன்னிசை யாழ் மொழியாள், எனும் சொற்களும் இருத்தலால்,

இ. த. சொ. - 9. யாழ்

எனும் சொல் முதன் முதலாக வருவதறியலாம். பதியம் 2ல் குழல், முழவு வர பதியம் நான்கில் யாழும் வந்தது.

நிறைவு = ஞானசம்பந்தன் சொன்ன பண்ணியல் பாடல் வல்லார்கள் இந்தப் பாரொடு விண்பரிபாலகரே'இங்கு பண்ணீயல் என்பது ஆறு இசைகளைக் கொண்ட பண்ணியற்றிறப் பண்ணாகும்.

## ஐந்தாம் பதியம்

## திருக்கீழைத் திருக்காட்டுப்பள்ளி: -

ஆறாவது பாடலில் "துளை பயிலுங் குழல் யாழ்முரலத் துன்னிய இன்னிசையால் துதைந்த" என்ற சொற்களும் வந்து பின்னர், நிறைவு = காழியர் கோன் துன்னிய இன் இசையாற்றுதைந்து சொல்லிய ஞானசம்பந்தன் நல்ல தன்னிசையாற் சொன்ன மாலை பத்துந்தாங்க வல்லார் புகழ் தாங்குவரே.' என அமைந்திருப்பதறியலாம்.

## ஆறாம் பதியம்

## திருமருகலும் திருச்செங்காட்டங் குடியும்: -

ஐந்தாம் பாடலில் 'பாடல் முழவும் விழவும் ஓவா' என்ற சொற்களும் 'செந்தமிழோர்கள் பரவியேத்தும்' என்ற சொற்களும் வந்துள்ளன. நிறைவு = சூலம்வல்லான் கழல் ஏத்து பாடல் சொல்லவல்லார் வினை இல்லையாமே

## ஏழாம் பதியம்

## திருநள்ளாறும் திருவாலவாயும்: -

முதற்பாடலில், நா. த. சொ, 3 நாடகம், என்ற சொல் வந்து மூன்றாம் பாடலில், அண்ணலின் பாடல், நான்காம் பாடலில், நாவினிற் பாடல், ஐந்தாம் பாடலில், பாட்டும்' ஏழாம் பாடலில், 'நாவணப் பாட்டு' ஒன்பதாம் பாடலில் மணியொலி, சங்கொலி, மாமுரசின் னொலி, என்ற சொற் கள் எல்லாம் வந்துள்ளமை அறியலாம்.

நிறைவு = ஞான சம்பந்தன் சொன்ன இன்புடைப் பாடல்கள் பத்தும் வல்லார் இமையவரேத்த இருப்பர். தாமே

## எட்டாம் பதியம்

## திரு ஆவூர்ப் பசுபதியீச்சரம்: -

முதற்பாட்டில், இ. த. சொ. 10 பண்ணியல், இதனை பண்ணியற்றி றம் எனப் பழந்தமிழ் கூறும். ஐந்தாம் பாடலில் வந்தணைந்து இன்னிசை பாடுவார், பத்தாம்

பாடலில் பன்னிய பாடல், எனவந்துளது. நிறைவு = ஞானசம்பந்தன் சொன்ன கொண்டு இனிதா இசை பாடி யாடிக் கூடு மவர் உடையார்கள் வானே.

## ஒன்பதாம் பதியம்

### திருவேணுபுரம் (சீகாழி)

மூன்றாம் பாடலில் 'நடந்தாங்கிய நடையார்' என்று சொற்கள் வந்தன.

நிறைவு - 'பந்தன் தன பாடல் ஏதத்தினை இல்லா இவை பத்தும் இசை வல்லார் கேதத்தினை இல்லார் சிவகெதியைப் பெறுவாரே.

## பத்தாம் பதியம்

### திருவண்ணாமலை

இப்பதியத்தில் நாம் தேடும் கலைச்சொற்கள் இலவாயினும்' ஞான சம்பந்தன் தமிழ் வல்லவர் அடிபேணுதல் தவமே' என நிறைவெய்துகிறது.

## பதினோராம்பதியம்

### திருவீழிமிழலை

இப்பதியத்தில், இரண்டாம் பாடலில் ஏழோசை என வருவதறியலாம். மூன்றாம் பாடலில் மும்மென்றிசை என்று கூறப் பெற்றதால் **மும்** என்பது வாயைக் குருளமாக வைத்துக்கொண்டு மூலந்தொடுத்து இயக்கியநாதத்தை வாயொலியாகக் காட்டாது. மூக்கொலியாகக் காட்டுவது அதாவது தொழில் செய்வதெனப்படும். இத்தொழின் முறை வண்டுகளிடத்து முன்றன என திருஞானசம்பந்தர் குறிப்பிடுவது அறிவோமாக.

நான்காவது பாடலில் **பண்ணும், பதம் ஏழும்**, பல வோசைத் தமிழ் அவையும் உள் நின்றதோர் சுவையும் உறு தாளத்தொலி பலவும் என் அருளியுள்ளமையால்,

இ. த. சொ. 11 சுவை
12 தாளம்

என இருசொற்கள் வந்தன.
நிறைவு

காழிந்நகர் **கலைஞானசம்பந்தன்** தமிழ் பத்தும் **யாழின்னிசை வல்லார்** சொலக் கேட்டாரவரெல்லாம் ஊழின் மலி வினைபோயிட உயர்வானடை வாரே.

இ. த. சொ. 13 கலை

## பன்னிரண்டாம்பதியம்

## திருமுதுகுன்றம்

இப்பதியம் நான்காம் பாடலில் தொகுகின்னார், எனவரும் சொற்களால், இ. த. சொ. 14 - கின்னரம் என்ற சொல் வந்தது. இது கின்னரி எனவும்படுமாம். இதனை இயக்குவோர், கின்னார். ஏழாம் பாடலில், " விழவோடொலி மிகு மங்கை யர் தரும் **ஆடகசாலை** முழவோடிசை நடமுன் செயும் " எனும் சொற்கள் வந்துள்ளன.

பத்தாவது பாடலில் "கருகு குழன் மடவார் கடி குறிஞ்சியது பாடி முருகன்னது பெருமைபகர் முதுகுன்று எனக் கூறியிருப்பதால் 15 **குறிஞ்சி** இது மலையும் மலை சார்ந்த இடங்களுமான குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்க ளிடத்தே இருந்த குறிஞ்சியாழ் எனும் கருவியில் நள்ளிர வில் இசைக்கப்பெறும் குறிஞ்சிப்பண்ணின் பெயரைக்குறிப் பதாயிற்று.

நிறைவு = ஆங்கு குறத்தியர் பாடுகின்றபண் குறிஞ்சிப்பண் புகலிந்நகர் மறைஞான சம்பந்தன் உரைசெய்த நிகரில் லன தமிழ் மாலைகள் இசையோடு இவை பத்தும் பகரும் அடியவர் கட்கு இடர்பாவம் அடையாவே.

## பதின்மூன்றாம்பதியம்

## திருவியலூர்

இப்பதியம் மூன்றாம் பாடலில், நின்று இசை பகர்வார் அவரிடமாம், என்ற சொற்களும், ஐந்தாம் பாடலில் மிகு கலையாய்ப் பண்ணார் தருமறையாயுயர், என்ற சொற்களும், வந்துள்ளன.

நிறைவு = புகலித்தகு தமிழ் ஞானசம்பந்தன் துளங் கிற்றமிழ் பரவித் தொழும் அடீயாரவர் என்றும் விளங்கும் புகழ் அதனோடுயர் விண்ணும் உடையாரே என அமைந் துள்ளமை அறியலாம்.

## பதின்நான்காம்பதியம்

## திருக்கொடுங்குன்றம்

இப்பதியம் இரண்டாம் பாடலில், குயிலின்னிசை பாடுங் குளிர்சோலை, என்ற சொற்கள் வந்து, ஞானத்துயர் சம்பந்தன நலங்கொள் தமிழ் வல்லார் ஊனத்தொடு துயர் தீர்ந்து உலகேத்தும் எழிலோரே, என நிறைவெய்துகிறது.

## பதினைந்தாம்பதியம்

## திருநெய்த்தானம்

இப்பதியம், மூன்றாம் பாடலில், நடமாடிய பெருமான், எனவந்து இறுதியில் தமிழ்ஞான சம்பந்தன். .... .... .. மல்கிய பாடல்லிவை பத்தும் மிகவல்லார் சிலமல்கிய செல்வன்னடி சேர்வர் **சிவகதியே** என்று நிறைவு எய்துகிறது.

## பதினாறாம்பதியம்

## திருப்புள்ளமங்கை

இப்பதியம், இரண்டாம் பாடலில், கலையான் மலி, என்ற சொல்லும் ஆறாம் பாடலில், இசையானவன், என்ற சொல்லும் வந்து இறுதியாக காழியுட் கலை ஞான சம்பந்தன் சந்தம்மலி பாடல் சொலி ஆடத் தவமாமே, என நிறைவு எய்துகிறது.

## பதினேழாம்பதியம்

## திரு விடும்பாவனம்

இப்பதியம் இரண்டாம் பாடலில், கலையார்தரு புல வோரவர், என்ற சொற்கள் வந்துள்ளன. பின்னர் முடிவில் காழியுள் அணிஞான சம்பந்தன் படியாற் சொன்ன பாடல் சொலப் பறையும் வினை தானே, என நிறைவு எய்துகிறது.

## பதினெட்டாம்பதியம்

## திருநின்றியூர்

இப்பதியம் மூன்றாம் பாடலில், பறையின்னொலி சங்கின்னொலி, என்ற சொற்கள் வந்துளதால் இ. த. சொ. 16 பறை(இங்கு, ஏழாம் பதியத்தில் வந்துள்ள மணி, சங்கு, மாமுரசு என்பனவும் இசைக் கருவிகள் ஆனவையால் அவற்றையும் இசைத் தமிழ்ச் சொற்களாகக் கொள்ள வேண்டும்)

ஐந்தாம் பாடலில், குழலின்னிசை வண்டின்னிசை, என்ற சொற்கள் அமைந்துள்ளமை காணலாம். இறுதியில் தமிழ் ஞானம் மிகுந்தன் குன்றாத் தமிழ் சொல்லக் குறைவு இன்றி நிறை புகழே, என நிறைவு எய்துகிறது.

## பத்தொன்பதாம்பதியம்

## திருக்கழுமலம் (சீகாழி)

இப்பதியம் ஐந்தாம் பாடலில், கலைமருவிய புறவணி தருகழுமலம், என்ற பொதுக் குறிப்பன்றி நாம் தேடும் மற்ற சொற்கள் இல்லை. பெருகிய தமிழ் விகினன்..... பிணைமொழியன...... விதியுடையவர்களே (நிறைவு)

## இருபதாம்பதியம்

## திருவீழிமிழலை

மூன்றாம் பாடலில் 'கலை நிலவிய புலவர்கள்' என வந்து இறுதிப்பாடல் சிரபுர நகரிறை தமிழ் விரகன துரை....... இனி தமர்வரே என நிறைவடைகிறது.

## இருபத்தியோராம்பதியம்

## திருச்சிவபுரம்

இப்பதியம் எட்டாம் பாடலில் 'இசைகயிலை' எனக் குறிப்பிடுவது அறியலாம். இறுதிப்பாடல், தமிழ் விரகன துரை.... தரநல மிகுவரே, என நிறைவெய்துகிறது.

## இருபத்தியிரண்டாம்பதிகம்

## திருமறைக்காடு

ஐந்தாம் பாடலில் 'பசுபதி பலகலை' என்ற சொற் களும், ஏழாம் பாடலில் 'மருவிய அறுபதம் இசை முரல' என்ற சொற்களும் வந்து இறுதிப் பாடல், மிகுகலை பல பயில் புலவர்கள் புகழ்வழி வளர் தரு இசையமர் கழுமல நகர்...... தமிழ் விரகன துரை............ இசைமலி தமிழ் ஒருபதும்..... எழில் பெறுவரே. என நிறைவு எய்துகிறது.

ஆகவே நட்டபாடைப் பண்ணில் திருஞானசம்பந்தர் அருளிய இருபத்தியிரண்டு பதியங்கள் இக்காலத்தில் நமக்குத் தெளிவுற அச்சுவாகனமேறி நன்கு உலவி விளங்கி வருவதனை நாம் திரும்பத் திரும்ப உணர்தல் வேண்டும். ஆயினும் இந்த 22 பதியங்களும் நன்கு உரிய முறையில் பண்ணோடு பாடப்பெற்று மக்கள் செவியில் ஓயாது கேட்டுக் கொண்டிருக்கும் பெரியதொரு முயற்சியைச் சில நெறியாளரால் இதுகாறும் செய்யப் பெறாது இருப்பது குறை பாடாகத்தான் முடிகிறது என்பது ஒரு தலை. நட்டபாடைப் பண்ணின் பழைய பெயர் நைவளம்.

சித்தாந்தம் - 1964 ஆ - மே, ஜுலை, மீ